# குருபாதுகா பஞ்சகம்

(ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கராசார்யர் அவர்கள் நர்மதா நதிக்கரையில் தம்முடைய குருவான ஸ்ரீ கோவிந்த பகவத்பாதரைத் தரிசித்த பொழுது அந்த ஆச்ரமத்தின் வாயிலில் குருவின் திவ்ய பாதுகைகளைக் கண்டவுடன் இந்த ச்லோகங்கள் ஸ்ரீ பகவத்பாதரின் வாக்கிலிருந்து உதித்தன.)

**ஜக3ஜ்ஜநிஸ்தே2ம - லயாலயாப்4யாம்**
**அக3ண்ய - புண்யோத3ய - பா4விதாப்4யாம் ।**
**த்ரயீசிரோஜாத - நிவே3திதாப்4யாம்**
**நமோ நம: ஸ்ரீகு3ருபாது3காப்4யாம் ॥** 1

ஸகல உலகங்களின் உற்பத்தி, ஸ்திதி, லயம் இவற்றுக்குக் காரணங்களாயும், எல்லையில்லாமல் இருக்கிற புண்ணிய பரிபாகத்தின் மகிமையினால் அடையக்கூடியனவாயும், வேதங்களின் சிரோபூதமான உபநிஷத்துக்களால் மட்டும் அறியக்கூடியனவுமான சத்சார்யருடைய பாதுகைகளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

**விபத்தமஸ்தோம - விகர்த்தநாப்4யாம்**
**விசிஷ்ட - ஸம்பத்தி - விவர்த4நாப்4யாம் ।**
**நமஜ்ஜநாசேஷ - விசேஷதா3ப்4யாம்**
**நமோ நம: ஸ்ரீகு3ருபாது3காப்4யாம் ॥** 2

ஆபத்துக்களாகிற இருள் கூட்டங்களைப் போக்குவதில் சூரியனாகவும், உயர்ந்த ஐச்வர்யங்களை மேன்மேலும் விருத்திபண்ணிக் கொடுக்கக்கூடியனவாயும் வணங்குகிற ஜனங்களுக்கு, எல்லை இல்லாத ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடியவையுமான ஸ்ரீ ஆச்சார்யாருடைய பாதுகைகளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

**ஸமஸ்த3 - துஸ்தர்க்க - கலங்க - பங்கா -**
**பநோத3ந - ப்ரௌட4 - ஜலாசயாப்4யாம் ।**
**நிராச்ரயாப்4யாம் நி2கி2லாச்ரயாப்4யாம்**
**நமோ நம: ஸ்ரீகு3ருபாது3காப்4யாம் ॥** 3

பலவாறான போலித் தர்க்கத்தினால் கற்பிக்கப்பட்ட தோஷங்களாகிற சேற்றைப் போக்கடிப்பதில் பெரிய ஜலப்பெருக்காயும், மற்றொன்றைத் தாம் ஆச்ரயிக்காமலும், மற்றவர்களாலே ஆச்ரயிக்கப்பெறுவனவாகவும் இருக்கிற ஸ்ரீ ஆச்சார்யாருடைய பாதுகைகளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

**தாபத்ரயாதி3த்ய - கரார்தி3தாநாம்**
**சா2யாமயீப்4யாம் அதிசீதலாப்4யாம் ।**
**ஆபந்ந - ஸம்ரக்ஷண3 - தீக்ஷிதாப்4யாம்**
**நமோ நம: ஸ்ரீகு3ருபாது3காப்4யாம் ॥** 4

ஆத்யாத்மிகம்: ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்று சொல்லக்கூடிய தாபத்ரயங்களாகிற கொடிய சூரிய கிரணங்களால் தகிக்கப்படுகிற ஸர்வ ஜீவராசி களுக்கும், மிகவும் குளிர்ந்த நிழலைக் கொடுப்பவையாயும், சரணமடைந்தவர்களை ஸம்ரக்ஷிப்பதையே முக்கிய நோக்கத்துடன் கூடியவையுமான ஸ்ரீ ஆச்சார்யா ருடைய பாதுகைகளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

**யதோ கி3ரோ(அ)ப்ராப்ய தி4யா ஸமஸ்தா**
**ஹ்ரியா நிவ்ருத்தா: ஸமமேவ நித்யா: ।**
**தாப்4யாமஜே3சாச்யுத - பா4விதாப்4யாம்**
**நமோ நம: ஸ்ரீகு3ருபாது3காப்4யாம் ॥** 5

ஸகல வேதராசிகளும், தம்முடைய புத்தி, யுக்திகளோடு கூடி, எவற்றின் மகிமையை வர்ணிக்க ஆரம்பித்தும் இயலாமல், லஜ்ஜையோடு திரும்பு கின்றனவோ, பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களால் எப்பொழுதும் கொண்டாடப பெற்றவையுமான ஸ்ரீ ஆச்சார்ய பாதுகைகளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

**யே பாது3கா - பஞ்சகமாத3ரேண**
**பட2ந்தி நித்யம் ப்ரயதா: ப்ரபா4தே ।**
**தேஷாம் க்3ருஹே நித்யநிவாஸசீலா**
**ஸ்ரீதே3சிகேந்த்3ரஸ்ய கடாக்ஷலக்ஷ்மீ: ॥** 6

எந்தப் பக்தர்கள் இந்தப் பாதுகா பஞ்சகத்தைத் ஆதராதிசயத்துடனும் பரிசுத்தர்களாயும் பிரதிதினம் காலையில் பாராயணம் செய்கிறார்களோ, அவர்க ளுடைய வீட்டில் ஸ்ரீ பரமாசார்யர்களுடைய கருணாவிலாசம் என்ற லக்ஷ்மீ நித்ய வாஸம் செய்கிறாள்.

